ன், றவ்வாறென்ப தொகைமொழிநிலையே. 10th பொது.Nun.

17. அவற்றுள் ; வேற்றுமைத்தொகையே வேற்றுமையியல.

18. உவமைத்தொகையே யுவமவியல.

19. வினையின்தொகுதி காலத்திய லும்.

20. வண்ணத்தின்வடி வினளவிற்சுவையினென்,
றன்னபிறவும் தன்கு ணுதலி, யின்னதிதுவென
வருஉமியற்கை, யென்னகிளவியும் பண்பின் றொகையே.

21. இருபெயர்பலபெயர் அளவின்பெயரோ,
யெண்ணியற்பெயரோநிறை
ப்பெயர்க்கிளவி, யெண்ணின்பெயரோ டவ்வறுகிளவியுங்,
கண்ணியநிலை
த்தே யும்மைத்தொகையே.

22. பண்புதொகவருஉங் கிளவியானு,
மும்மைதொக்க பெயர்வயினு

20

னும், வேற்றுமைதொக்க பெயர்வயினுனு, மீற்றுநின்றியலு மன்மொழித்
தொகையே.

23. அவைதா, முன்மொழிநிலையலும், பின்மொழிநிலையலு, மிருமொழி மேலுமொருங்குடனிலையலு, மம்மொழிநிலையாதன்மொழிநிலையலு, மந் நான்கென்ப பொருணிலைமரபே.

24. எல்லாத் தொகையு மொருசொன்னடைய.

25. உயர்திணைமருங்கி னும்மைத்தொகையே, பலர்சொன்னடைத்தென மொழிமனார்புலவர்

26. ¶ வாராமரபினவரக்கூறுதலு,மென்னுமரபின வெனக்கூறுதலு,மன் னவையெல்லா மவற்றவற்றியல்பா, னின்னவென்னுங் குறிப்புரையாகும்

27. ¶ இசைபடு பொருளே நான்குவரம்பாகும்,விரைசொல்லடுக்கேமூன் றுவரம்பாகும். See 5th Soot. (எச்சவியல்) above.

28. கண்டிரொன்று கொண்டிரொன்று, சென்றதென்று போயிற்றென்று வன்றியனைத்தும் வினாவொடுசிவணி, நின்றவழியசைக்குங் கிளவியென்ப

29. கேட்டையென்று நின்றையென்று, காத்தையென்றுகண்டையென் று,வென்றிவனைத்துமுன்னிலையல்வழி,முன்னுறக்கிளந்த வியல்பாகும்மே.

தொகாநிலைச்சொற்கள்.

30. ¶ இறப்பினிகழ்வி னெதிர்வினென்றச்,சிறப்புடை மரபினம்முக்கால மூன், தன்மைமுன்னிலை படர்க்கையென்னு, மம்மூவிடத்தன வினையினு ங்குறிப்பினு, மெய்ம்மையானு மீரிரண்டாகு, மவ்வாறென்ப முற்றியன் மொழியே. 23rd Soot. பொது. Nun.

31. எவ்வயின்வினையுமவ்வயினிலையும். [முடிபினவே.

32. அவைதாம்,தத்தங்கிளவி யடுக்குநவரினு, மெத்திறத்தானும் பெயர் எஞ்சுபொருட்கிளவி.

33. ¶ பிரிநிலைவினையே பெயரே யொழியிசை,யெதிர்மறையும்மை யென வேசொல்லே, குறிப்பேயிசையேயாயீரைந்து, நெறிப்படத்தோன்று மெஞ்சு பொருட்கிளவி. 9th Soot. பொதுவியல் Nun.

34. அவற்றுள், பிரிநிலையெச்சம் பிரிநிலைமுடிபின.

35. வினையெஞ்சுகிளவிக்கு வினையுங்குறிப்பு,நினையத்தோன்றிய முடிபாகும்மே, யாவயிற்குறிப்பே யாக்கமொடுவருமே.

36. பெயரெஞ்சுகிளவி பெயரொடுமுடிமே.

37. ஒழியிசையெச்ச மொழியிசை முடிபின.

38. எதிர்மறையெச்ச மெதிர்மறைமுடிபின.

39. உம்மையெச்ச மிருவீற்றானும், தன்வினையொன்றிய முடிபாகும்மே.

40. தன்மேற்செஞ்சொல் வரூஉங்காலை, நிகழுங்காலமொடு வாராக்காலமு, மிறந்தகாலமொடு வாராக்காலமும், மயங்குதல்வரையார் முறைநிலையான.

41. எனவெனெச்சம் வினையொடுமுடிமே.



42. எஞ்சியமூன்றுமேல்வந்துமுடிக்கு, மெஞ்சுபொருட்கிளவி யிலவெ னமொழிப.

43. அவைதாம், தத்தங்குறிப்பினெச்சஞ்செப்பும்.

[ன்றே.

44. சொல்லெனெச்ச முன்னும்பின்னுஞ், சொல்லளவல்ல தெஞ்சுதலி ; 45. ¶ அவையல்கிளவி மறைத்தனர்கிளத்தல். 10th Soot. பெயரி.Nun.

46. மறைக்குங்காலை மரீஇயதொரால்.

47. ¶ ஈதாகொடுவெனக் கிளக்குமூன்று,மிரவின்கிளவி யாகிடனுடைய.

48. அவற்றுள் ; ஈயென்கிளவி யிழிந்தோன் கூற்றே, தாவென்கிளவி. யொப்போன் கூற்றே, கொடுவென்கிளவி யுயர்ந்தோன்கூற்றே.

49. கொடுவென்கிளவி படர்க்கையாயினுந்,தன்னைப்பிறன்போற் கூறுங் குறிப்பிற், றன்னிடத்தியலு மென் மனார்புலவர்.

50. ¶ பெயர்நிலைக்கிளவியி னாஅகுநவுந்,திசைநிலைக்கிளவியி னாஅகுநவுந், தொன்னெறிமொழிவயி னாஅகுநவு,மெய்ந் நிலைமயக்கி னாஅகுநவு,மந்திரப் பொருள்வயி னாஅகுநவு, மன்றியனைத்துங் கடப்பாடிலவே.

51. ¶ செய்யாயென்னு முன்னிலைவினைச்சொற்,செய்யென்கிளவி யாகிட னுடைத்தே

52. முன்னிலைமுன்ன ரீயுமேயு, மந்நிலைமரபின் மெய்யூர்ந்துவருமே.

MISCELLANEA.

53. ¶ கடிசொல்லில்லைக் காலத்துப்படினே.
54. குறைச்சொற்கிளவி குறைக்கும்வழியறிதல்.
55. குறைத்தனவாயினு நிறைப்பெயரியல.
56. இடைச்சொல்லெல்லாம் வேற்றுமைச்சொல்லே.
57. உரிச்சொன் மருங்கினு முரியவையுரிய·
58. வினையெஞ்சுகிளவியும் வேறுபலகுறியா.
59. உரையிடத்தியலு முடனிலைபறிதல்.
60. முன்னத்தினுணருங் கிளவியுமுளவே,
யின்னவென்னுஞ் சொன்மு
றையான. 57th and 61st கிளவி: 12th பெயரி; 7th and 57th பொது.Nun.
61. ஒருபொருளிருசொற் பிரிவிலவரையார். [டே.
62. ஒருமைசுட்டியபெயர்நிலைக்கிளவி, பன்மைக்காகு மிடனுமாருண்
63. முன்னிலைசுட்டிய வொருமைக்கிளவி, பன்மையொடுமுடியினும் வ
ரைநிலையின்றே, யாற்றுப்படைமருங்கிற் போற்றல்வேண்டும்.
64. ¶ செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினு, மெய்பெறக்கிளந்தகி
ளவியெல்லாம், பலவேறுசெய்தியி னூனெறிபிழையாது, சொல்வரைந்த
றியப்பிரித்தனர்காட்டல். ஒன்பதாவது எச்சவியல்
முற்றிற்று.

## NUNNOOL.

## CHAPTER I. பெயரியல், OF NOUNS.

1. முச்சகநிழற்று முழுமதிமுக்குடை
யச்சுதனடிதொழு தறைகுவ
ன்சொல்லே. Invocation to Argha.

சொல்லிலக்கணம்.

2. ¶ ஒருமொழிதொடர்மொழி பொதுமொழியென்ரு, இருதிணையைம்
பாற் பொருளையுந்தன்னையு, மூவகையிடத்தும் வழக்கொடுசெய்யுளின் வெளிப்படைகுறிப்பின் விரிப்பதுசொல்லே. Definition.

3. ஒருமொழியொருபொரு ளனவாந்தொடர்மொழி, பலபொருளன பொது விருமையுமேற்பன. Division of words.

4. ¶ மக்கடேவர் நரகருயர்திணை, மற்றுயிருள்ளவு மில்லவுமஃறிணை.

5. ஆண்பெண்பலரென முப்பாற்றுயர்திணை. High Caste.

6. ஒன்றேபலவென் றிருபாற்றஃறிணை. No Caste.

7. ¶ பெண்மைவிட்டாணவாவுவ பேடாண்பா, லாண்மைவிட்டல்லது வாவுவபெண்பா, லிருமையுமஃறிணை யன்னவுமாகும்.

8. ¶ படர்க்கைவினைமுற்று நாமங்குறிப்பிற், பெறப்படுந்திணைபா லனை த்துமேனை யிடத்தவற்ருருமைப் பன்மைப்பாலே.

9. ¶ தன்மைமுன்னிலை படர்க்கைமூவிடனே. Three Persons.

10. ¶ இலக்கணமுடைய திலக்கணப்போலி,

மருஉவென்றுகு மூவகையி
யல்பு, மிடக்கரடக்கன் மங்கலங்குழூஉக்குறி, யெனுமூத்தகுதியோ டாரு
ம்வழக்கியல். Tamil Usages and Acceptations.

11. ¶ பல்வகைத்தாதுவி னுயிர்க்குடல்போற்பல, சொல்லாற்பொருட்
கிட னாகவுணர்வினின், வல்லோரணிபெறச் செய்வனசெய்யுள்.

12. ¶ ஒன்றொழிபொதுச்சொல் விகாரந்தகுதி, யாகுபெயரன் மொழிவி
னைக்குறிப்பே, முதறொகைகுறிப்போ டின்னபிறவுங் குறிப்பிற்றருமொழி
யல்லனவெளிப்படை.

## Division of Words in General.

13. ¶ *அதுவே, இயற்சொற்றிரிசொ லியல்பிற்பெயர்வினை,*
*யெனவிரண்*
டாகு மிடையுரியடுத்து, நான்குமாந்திசைவட சொல்லணுகாவழி.

14. செந்தமிழாகித் திரியாதியார்க்குந் தம்பொருள்விளக்குந் தன்மைய
வியற்சொல்.

15. ஒருபொருள்குறித்த பலசொல்லாகியும் பலபொருள்குறித்த வொரு
சொல்லாகியு மரிதுணர்பொருளன திரிசொல்லாகும்.

16. செந்தமிழ்நிலஞ்சேர் பன்னிருநிலத்தினு, மொன்பதிற்றிரண்டினிற்
றமிழொழிநிலத்தினுந் தங்குறிப்பினவே திசைச்சொலென்ப. [வடசொல்.

17. பொதுவெழுத்தானுஞ் சிறப்பெழுத்தானு மீரெழுத்தானு மியைவன
பெயரிலக்கணம்.

18. ¶ இடுகுறிகாரண மரபோடாக்கந், தொடர்ந்துதொழிலல காலந்தோ
ற்றா, வேற்றுமைக்கிடனாய்த் திணைபாலிடத்தொன், றேற்பவும்பொதுவு
மாவனபெயரே. Definition of Noun.

19. அவற்றுள், கிளையெண்குழூஉமுதற் பலபொருடிணைதே, மூர்வானகம்
புற முதலநிலன்யாண், டிருதுமதிநா ளாதிக்காலந் தோள்குழன்மார்புகண்

காதமுதலூறுப், பளவறிவொப்பு வடிவுநிறங்கதி, சாதிகுடிசிறப் பாதிப்ப
ல்குண, மோதலீத ஸாதிப்பல்வினை யிவையடைசுட்டு வினுப்பிறமற்றே
டுற்றனவ்வீறு ஈம்பியாடே விடலைகோவேள் குரிசிறேன்ற வின்னனவா
ண்பெய ராகுமென்ப. Masculine singular.

20. கிளைமுதலாகக் கிளந்தபொருள்களு
ளவ்வொற்றிகரக் கேற்றவீற்ற வுந் தோழிசெவிலி
மகடூஉநங்கை தையலோடின்னன பெண்பாற்பெயரே.

21. கிளந்தகிளைமுத லுற்றாவ்வீற்றவுங் கள்ளொனீற்றி
னேற்பவும்பிறவும் பல்லோர்பெயரின் பகுதியாகும். High caste Plural.

22. வினுச்சுட்டுடனும் வேறுமாம்பொரு ளாதியுறுதுச்
சுட்டீணையாய்த மொன்றனெண்ணின்னன
வொன்றன்பெயரே. Neuter singular.

23. முன்னரவ்வொடு வருவையவ்வுஞ் சுட்டிறுவவ்வுங்
கள்ளிறுமொழி யு மொன்றலெண்ணுமுள்ள வில்ல
பல்லசில்ல வுளவிலபலசில வின்னவும் பலவின்
பெயராகும்மே. Neuter Plural.

24. ¶ பால்பகாவஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய. Epicenes.

25. ¶ முதற்பெயர்நான்குஞ் சினைப்பெயர்நான்குஞ்
சினைமுதற்பெய ரொரு நான்குமுறையிரண்டுந்

தன்மைநான்குமுன்னிலையைந்து மெல்லாந் தாந்தா
னின்னனபொதுப்பெயர். Epicenes.

26. ஆண்மைபெண்மை யொருமைபன்மையி
னுமந்நான்மைக ளாண்பெ ண்முறைப்பெயர்.

27. அவற்றுள், ஒன்றேயிருதிணைத் தன்பாலேற்கும்.

28. தன்மையானுன் யாம்நாமுன்னிலை யெல்லீர்நீயிர்
நீவிர்நீர்நீ யல்லன படர்க்கை யெல்லாமெனல்பொது.

29. வினையின்பெயரே படர்க்கைவினையா
லணையும்பெயரே யாண்டு மாகும்.

30. தான்யானுனீ யொருமைபன்மை தாம்யாம்நாமெலா
மெலீர்நீயிர் நீர்நீவிர்.

31. ஒருவனொருத்திப் பெயர்மேலெண்ணில,
[றென்ப.

32. ஒருவனென்ப துயரிருபாற்கும்ப்,
பன்மைவினைகொளும் பாங்கிற்

ஆகுபெயர். 31st வேற்றுமைமயங்கியல்,
Tholcapyam.

33. ¶ பொருண்முதலாறோ டளவைசொற்றாகி
கருவிகாரியங் கருத்தனு தியு ளொன்றன்பெயரா
னதற்கியைபிறிதைத் தொன்முறையுரைப்பன
வாகுபெயரே. Definition of Metonymy.

CASES: வேற்றுமையிலக்கணம்.

34. ¶ ஏற்குமெவ்வகைப் பெயர்க்குமீறாய்ப்பொருள்
வேற்றுமைசெய் வன வெட்டேவேற்றுமை. Definition.

35. பெயரேஐஆல்குஇன் அதுகண்
விளியென்றுகுமவற்றின்பெயர்முறை.

36. ஆறனுருபு மேற்குமவ்வுருபே.
37. நீயிர்நீவிர் நானெழுவாயலபெறு.



38. ¶ அவற்றுள், எழுவாயுருபு திரிவில்பெயரோ,
வினைபெயர் வினுக்கொ
ளல் அதன்பயனிலையே. First Case.

39. ¶ இரண்டாவதனுரு பையேயதன்பொரு, ளாககலழித்த லடைதனி
த்த, லொத்தலுடைமை யாதியாகும். Second Case.

40. ¶ மூன்றுவதனுரு பாலானுேடொடு, கருவிகருத்தா வுடனிகழ்வதன்
பொருள். Third Case.

41. ¶
நான்காவதற்குருபாகுங்குவ்வே,கொடைபகைநேர்ச்சிதகவதுவா
தல் பொருட்டுமுறையாதியினிதற்கிதெனல்பொருளே.
Fourth Case.

42. ¶ ஐந்தாவதனுரு பில்லுமின்னும்,
நீங்கலொப்பெல்லை யேதுப்பொ
ருளே. Fifth Case.

43. ¶ ஆறனொருமைக் கதுவுமாதுவும்,பன்மைக்கவ்வு
முருபாம்பண்புறு
ப்,பொன்றன் கூட்டம் பலவினீட்டந் திரிபினுக்க

மாந்தற்கிழமையும் பிறி
தின்கிழமையும்பேணுதல்பொருளே. Sixth Case.

44. ¶ ஏழனுருபுகண் ணுதியாகும் பொருண்முதலாறு மோரிருகிழமையி
னிடனாய்நிற்ற லிதன்பொருளென்ப. Seventh Case.

45. கண்கால்கடையிடை தலைவாய்திசைவயின் முன்சார்வலமிட மேல்
கீழ்புடைமுதல் பின்பாடளைதே முறைவழியுழியுளி யுள்ளகம்புறமில் லிட
ப்பொருளுருபே. Endings of the Seventh Case.

விளிமரபு—THE 8th OR VOCATIVE CASE.

46. ¶ எட்டனுருபே யெய்துபெயரீற்றின், திரிபுகுன்றன் மிகுதலியல்ப
யற்,றிரிபுமாம்பொருள் படர்க்கையோரைத், தன்முகமாகத் தானழைப்ப
தவே. See the 4th Chapter, Bk II. Tholcapyam.

47. இஉஊவோடையோனளரல, யவ்வீற்றுயர்திணை யோரவல்லிவற்
றொடு, ணஃகானுவீ றுரும்பொதுப்பெயர், ஞநவொழியனைத்தீற் றஃறிணை
விளிப்பன.

48. இம்முப்பெயர்க்கண் ணியல்புமேயு, மிகரநீட்சியு முருபாமன்னே.

49. ஐமிறுபொதுப்பெயர்க் காயுமாவு, முருபாமல்லவற் றுயுமாகும்.

50. ஒருசார்னவ்வீற் றுயர்திணைப்பெயர்க்கண்,

ணளபீறழிவய னீட்சியத

ஞோ, டீறுபோத லவற்ருேடோவுற, லீறழிந்தோவர விறுதியவ்வாத, லத ஞேடயறிரிந் தேயுறலீறழிந், தயலேயாதலும் விளியுருபாகும்.

51. ளஃகானுயர்பெயர்க் களபீறழிவய, னீட்சியிறுதி யவ்வொற்ருத, லயலிலகரமே யாதலும்விளித்தறு.

52. ரவ்வீற்றுயர்பெயர்க் களபெழலீற்றய, லகரம்இரயாதலாண்டையா, வீயாதலதஞே டேயுறலீற்றே, மிக்கயல்யாக்கெட், டதனயனீட லீற்றினீ ருறவிவையுமீண்டுருபே. [ருபே.

53. லகாரவீற்றுயர்பெயர்க் களபயனீட்சியும், யகாரவீற்றிற்களபுமாமு

54. னவ்வீற்றுயர்திணை யல்விருபெயர்க்கண், ணிறுதியழிவத ஞேடய னீட்சி.

25

55. லளவீற்றஃறிணைப்பெயர்பொதுப்பெயர்க்கண், ஈற்றயனீட்சியு முரு பாகும்மே. [கும்.

56. அண்மையினியல்புமீ றழிவுஞ்சேய்மையின் அளபும்புலம்பிஞேவுமா

57. நவ்வொடுவிஞச்சுட் டிற்றனளர, வைதுத்தாம்தான் இன்னனவிளி யா. See 7th and 8th Pages, Book II.

## வேற்றுமைமயக்கம்.

58. ¶ முதலை ஐயுறிற் சினையைக்கண்ணுறும், அதுமுதற்காயிற் சினைக்கை யாகும். Substitution or Interchange of Cases.

59. முதலிவைசினையிவை யெனவேறுளவில, உரைப்போர்குறிப்பின அற்றேபிண்டமும்.

60. யாதனுருபிற் கூறிற்றாயினும் பொருள்சென்மருங்கின் வேற்றுமை சாரும். A quotation from Tholcapyam. 23rd Soot. வேற். மயங்.

61. ஐயான்குச்செய்யுட்கவ்வுமாகும், ஆகாவஃறிணைக்கானல்லாதன.

62. ¶ எல்லையின்னு மதுவும்பெயர்கொளும்,அல்லவினைகொளும்நான்கே ழிருமையும், புல்லும்பெரும்பாலு மென்மனார்புலவர்.

---

## CHAPTER II. வினையியல் OF VERBS.

1. செய்பவன்கருவி நிலஞ்செயல்காலஞ், செய்பொருளாறுந் தருவது வினையே. Definition of Verb. 1st Soot. வினை. Thol. p. 11.

2. பொருண்முதலாறினுந் தோற்றிமுன்னாறனுள்,வினைமுதன்மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே. Derivative Verbs.

3. ¶ அவைதாம், முற்றும்பெயர்வினையெச்சமுமாகி, ஒன்றற்குரிய வும் பொதுவுமாகும். Perfect and Imperfect Inflections. See 4th Soot. வினையியல் Tholcapyam.

4. பொதுவியல்பாறையுந் தோற்றிப்பொருட்பெயர், முதலாறுபெயரல தேற்பிலமுற்றே. Perfect Inflections or Finite Verbs.

5. ¶ ஒருவன்முதலைந்தையும் படர்க்கையிடத்தும், ஒருமைப்பன்மை

யைத்தன்மைமுன்னிலையினும், முக்காலத்தினு மாணமுறையே, மூவைந்திருமூன் ருருய்முற்று, வினைப்பதமொன்றேமூவொன்பானும்.

6. அன் ஆனிறுமொழி ஆண்பாற்படர்க்கை. 8th Soot. வினை. Thol.

7. அள் ளாளிறுமொழிபெண்பாற்படர்க்கை. 8th Soot. வினை. Thol.

8. அர் ஆர்பவ்வூரகரமாரீற்ற,பல்லோர்படர்க்கைமார்வினையொடுமுடிமே See 9th and 10th வினையியல் Tholcapyam.

9. ஆறுடுக்குற்றிய லுகரவீற்ற
வொன்றன் படர்க்கைடுக்குறிப்பினுகும்
20th வினையியல் Tholcapyam.

10. அஆவீற்றபலவின்படர்க்கை,ஆவேயெதிர்மறைக்கண்ணதாகும் 19th Soot. வினையியல் Tholcapyam.

D



11. ¶ தன்மைமுன்னிலைவியங்கோள்வேறிலை

உண்டீமொச்சமிருதிணைப் பொதுவினை. Common to two திணை.

12. குடுதுறுவென்னுங்குன்றிய லுகரமோ,
டல்லன்னென்னேனுருமீற்ற
இருதிணைமுக்கூற்றொருமைத்தன்மை. 6th Soot. வினை. Thol.

13.
அம்மாமென்பனமுன்னிலையாரையு,மெம்மேமோமிவைபடர்க்கையாரையும், உம்மூர்கடதறவிருபாலாரையுந்,

தன்னொடுபடுக்குந்தன்மைப்பன்

மை. See 5th Soot. வினையியல் Tholcapyam.

14. செய்கெனொருமையுஞ்செய்குமென்பன்மையும், வினையொடுமுடியி

னும்விளம்பியமுற்றே.

7th Soot. வினையியல் Tholcapyam.

15. முன்னிலைகூடியபடர்க்கையுமுன்னிலை.

16. ஐயாயிகரவீற்றமூன்றும், ஏவலின்வருஉமெல்லாவீற்றவும், முப்பா

லொருமை முன்னிலைமொழியே. 26th Soot. வினையியல் Tholcapyam.

17. முன்னிலைமுன்னரீயுமேயும்அந்நிலைமரபின்மெய்யூர்ந்துவருமே27th Soot. வினையியல் Tholcapyam.

18. இர்ஈரீற்றவிரண்டுமிருதிணைப் பன்மைமுன்னிலைமின்னவற்றேவல்,

26th and 27th வினையியல் Tholcapyam.

19. கயவொடுரவ்வொற்றீற்றவியங்கோள்இயலுமிடம்பாலெங்குமென்ப.

20. வேறில்லையுண்டைம்பான்மூவிடத்தன.

IMPERFECT INFLECTIONS. RELATIVE

Participles.

21. ¶ செய்தசெய்கின்றசெய்யுமென்பாட்டிற்,காலமுஞ்செயலுந்தோன்றிப்பாலொடு, செய்வதாதியறுபொருட்பெயரும், எஞ்சநிற்பதுபெயரெச்சம்மே. 37th and 38th Sootrums of வினையியல் Tholcapyam.

22. செய்யுமெனெச்சவீற்றுயிர்மெய்சேறலுஞ், செய்யுளுளும்முந்தாகலுமுற்றேல், உயிருமுயிர்மெய்யுமேகலுமுளவே.

## Verbal Participles.

23. ¶ தொழிலுங்காலமுந் தோன்றிப்பால்வினை,
ஒழியநிற்பது வினை யெச்சம்மே.

24. செய்துசெய்பு செய்யாச்செய்யூச்
செய்தெனச்செயச்செயின் செய் யியசெய்யியர்
வான்பான்பாக்கின வினையெச்சம், பிறவைந்தொன்றுமு
க்காலமுமுறைதரும். 31. 32. 33. 34. 35. 36. வினையியல்; Thol.

25. அவற்றுள், முதலினன்குமீற்றின்மூன்றும்வினைமுதல்கொள்ளும்,பிறவுமேற்கும்பிற.

26. சினைவினைசினையொடுமுதலொடுஞ்செறியும்.

27. சொற்றிரியினும்பொருடிரியாவினைக்குறை.

28. ஆக்கவினைக்குறிப்பாக்கமின்றியலா.

29.
பல்லோர்படர்க்கைமுன்னிலைதன்மையிற்,செல்லாதாகுஞ்செய்யுமென்முற்றே.

30. யாரென்வினாவினைக்குறிப்புயர்முப்பால்.

31. எவனென்னிஞவினைக்குறிப்பிழியிருபால்.
[வே.

32. வினைமுற்றேவினை யெச்சமாகலுங்
குறிப்புமுற்றீரெச்சமாகலுமுள

## CHAPTER III. பொதுவியல்

## REMARKS AND OBSERVATIONS ON CONSTRUCTION.

1. ¶ இருதிணையாண்பெணுளொன்றனையொழிக்கும்
பெயரும்வினையுங்
குறிப்பினுனே.
[ரித்தே.

2. பெயர்வினையிடத்து னளரயவீற்றயல்
ஆவோவாகலுஞ்செய்யுளுரு

3. ¶
உருபும்வினையுமெதிர்மறுத்துரைப்பினுந்திரியா தத்தமீற்றுருபினெ
ன்ப.

4.
உருபுபலவடுக்கினும்வினைவேறடுக்கினுமொருதம்மெச்சமீறுறமுடியும்

5. உருபுமுற்றீரெச்சங்கொள்ளும்
பெயர்வினையிடைப்பிறவரலுமாமே ற்பன.

6. எச்சப்பெயர்வினை எய்துமீற்றினும்.

7. ஒருமொழியொழிதன்னினங்கொளற்குரித்தே.

8. பொதுப்பெயர்வினைகளின்பொதுமைநீக்கும், மேல்வருஞ்சிறப்புப் பெயர்வினைதாமே.

9. ¶ பெயர்வினையும்மைசொற்பிரிப்பெனவொழியிசை யெதிர்மறையி சையெனுஞ்சொல்லொழிபொன்பதும் குறிப்புந்,தத்தமெச்சங்கொள்ளும்.

10. ¶பெயரொடுபெயரும்வினையும்வேற்றுமைமுதலியபொருளினவற்றி னுருபிடை,யொழியவிரண்டுமுதலாத்தொடர்ந்தொருமொழிபோனடப்ப னதொகைநிலைத்தொடர்சொல். 16th எச்சவியல் Tholcapyam.

11. வேற்றுமைவினைபண்புவமையும்மை அன்மொழியெனவத்தொகை யாறுகும். 17th எச்சவியல் Tholcapyam.

12. இரண்டுமுதலா இடையாறுருபும் வெளிப்படலில்லது வேற்றுமைத் தொகையே. 17th எச்சவியல் Tholcapyam.

13. காலங்கரந்தபெயரெச்சம்வினைத்தொகை. 19th எச்சவியல்.

14. பண்பைவிளக்குமொழிதொக்கனவும் ஒருபொருட்கிருபெயர்வந்தவு ங்குணத்தொகை. 20th எச்சவியல்.

15. உவமவுருபிலதுவமத்தொகையே.

11th Soot. உவமவியல் Bk. III.

Also 18th எச்சவியல் Book II.

16. போலப்புரைய ஒப்பஉறழ மானக்கடுப்ப நேரநிகர இயையஏய்ப்ப அன்னஇன்ன என்பவும்பிறவுமுவமத்துருபே. 11th உவமவியல்.

17. எண்ணலெடுத்தல் முகத்தனீட்டல் எனுநான்களவையுள் உம்மிலதத் தொகை. 21st Soot. எச்சவியல்.

18. ஐந்தொகைமொழிமேற்பிறதொகலன்மொழி. 22, 23. எச்சவியல்.

19. முன்மொழிபின்மொழிபன்மொழிபுறமொழி, எனுநான்கிடத்துஞ்சி

றக்குர்தொகைப்பொருள்.



20. வல்லொற்றுவரினே இடத்தொகையாகும், மெல்லொற்றுவரினே பெயர்த்தொகையாகும்.

21. உயர்திணையும்மைத்தொகை பலர்ஈறே.

22. தொக்குழிமயங்குன இரண்டுமுதலே ஏழெல்லைப்பொருளின் மயங்குமென்ப.

23. ¶ முற்றீரெச்சமெழுவாய்விளிப்பொரு ளாறுருபிடையுரியடுக்கிவை தொகாநிலை.

24. ¶ திணையேபாலிடம்பொழுதுவிஞவிறைமரபாமேழுமயங்கினும்வழுவே.

25. ஐயந்திணைபாலவ்வப்பொதுவினும்,மெய்தெரிபொருண்மேலன்மையுமிளம்புப.

26. உயர்திணைதொடர்ந்தபொருண்முதலாறும் அதனொடுசார்த்தினத்திணைமுடிபின.

27. திணைபால்பொருள்பலவிரவினசிறப்பினும் மிகவினுமிழிபினுமொருமுடிபினவே.

28. உவப்பினுமுயர்வினுஞ் சிறப்பினுஞ்செறலினும் இழிப்பினும்பாறிணை யிழுக்கினுமியல்பே.

29. ஒருமையிற்பன்மையும் பன்மையினொருமையும் ஓரிடம்பிறவிடந்த ழுவலுமுளவே.
30. தால்வரல்கொடைசெலல் சாரும்படர்க்கை, எழுவாயிரண்டு மெஞ்சி யவேற்கும்.

31. இறப்பெதிர்வு நிகழ்வெனக் காலமூன்றே. The Three Tenses.

32. முக்காலத்தினுமொத்தியல்பொருளைச்செப்புவர்நிகழுங்காலத்தானே.
33. விரைவினுமிகவினுந் தெளிவினுமியல்பினும் பிறழவும்பெறூஉமுக் காலமுமேற்புழி.

34. அறிவறியாமை ஐயுறல்கொளல்கொடை ஏவறுரும்வினு ஆறுமிழுக் கார். Six kinds of Interrogation.
35. சுட்டுமறைநேரேவல்வினுத லுற்றதுரைத்த லுறுவதுகூற லினமொ ழியெனுமெண் ணிறையுளிறுதி நிலவியவைந்துமப் பொருண்மையினேர்ப.
36. வினுவினுஞ்செப்பினும் விரவாசினைமுதல்.
37. ¶ எப்பொருளெச்சொலி னெவ்வாறுயர்ந்தோர் செப்பினரப்படிச் செப்புதன்மரபே. Definition of மரபு. மரபினுவிரி.
38. வேறுவினைப்பல்பொரு டழுவியபொதுச்சொ லும் வேறவற்றெண் ணுமோர் பொதுவினைவேண்டும்.

39. வினைசார்பினமிட மேவிவிளங்காப்பலபொருளொருசொற்பணிப்பர் சிறப்பெடுத்தே.

40. எழுத்தியதிரியாப் பொருடிரிபுணர்மொழி, இசைத்திரிபால்த்தெளி வெய்துமென்ப.

29

41. ஒருபொருண்மேற்பல பெயர்வரின்இறுதி,யொருவினை கொடுப்பதனி யுமொரோவழி.

42. திணைநிலஞ்சாதி குடியேயுடைமை குணந்தொழில்கல்வி சிறப்பாம் பெயரோ டியற்பெயரேற்றிடில், பின்வரல்சிறப்பே.

43. படர்க்கைமுப்பெயரோ டணையிற்சுட்டுப் பெயர்பின்வரும்வினையெ னிற்பெயர்க்கெங்கு மருவும்வழக்கிடை செய்யுட்கேற்புழி.

44. அசைநிலைபொருணிலை யிசைநிறைக்கொருசொல், இரண்டுமூன்றுநா ன்கெல்லைமுறையடுக்கும்.

45. இரட்டைக்கிளவி இரட்டிற்பிரிந்திசையா.

46. ஒருபொருட்பல்பெயர் பிரிவிலவரையார்.

47. ஒருபொருட்பன்மொழி சிறப்பினின்வழா.

48. இனத்தென்றறிபொரு ளுலகினிலாப்பொருள், வினைப்படுத்துரைப்பி ன் உம்மைவேண்டும்.

49. செயப்படுபொருளைச் செய்ததுபோலத் தொழிற்படக்கிளத்தலும் வழக்கினுள் உரித்தே. 49th Soot. வினையியல் Tholcapyam.

50. பொருண்முதலாறு மடைசேர்மொழியினம் உள்ளவுமில்லவும் ஆம் இருவழக்கினும்.

51. அடைமொழியினமல் லதுந்தரும் ஆண்டுறின்.
52. அடைசினைமுதன்முறை யடைதலுமீரடை முதலோடாதலும் வழக்கியலீரடை சினையொடுசெறிதலு மயங்கலுஞ் செய்யுட்கே.
53. இயற்கைப்பொருளை இற்றெனக்கிளத்தல்.

54. காரணமுதலா வாக்கம்பெற்றுங் காரணமின்றி யாக்கம்பெற்றும் ஆக்கமின்றிக் காரணமடுத்தும், இருமையுமின்றியு மியலுஞ்செயும்பொருள்.
55. தம்பாலில்லதில் லெனின்இனனு யுள்ளதுகூறியும் மாற்றியுமுள்ளது சுட்டியுமுரைப்பர் சொற்சுருங்குதற்கே.

56. ஈதாகொடுவெனு மூன்றுமுறையே இழிந்தோனொப்போன் மிக்கோனிரப்புரை.

57. முன்னத்தினுணருங் கிளவியுமுளவே.

58. கேட்குநபோலவுங் கிளக்குநபோலவு மியங்குநபோலவு மியற்றுநபோலவும் அஃறிணைமருங்கினும் அறையப்படுமே.

59. உருவகவுவமையில் திணைசினைமுதல்கள் பிறழ்தலும்பிறவும் பேணினர்கொளலே. மரபுவிரி முற்றிற்று.

## பொருள்கோள். POETIC CONSTRUCTION.

60. ¶ ஆற்றுநீர்மொழிமாற்று நிரனிறைவிற்பூண், டாப்பிசையளைமறி பாப்புக்கொண்டுகூட், டடிமறிமாற்றெனப் பொருள்கோளெட்டே.
61. மற்றயனேக்கா தடிதொறும்வான்பொரு, ளற்றற்றொழுகு மஃதியாற்றுப்புனலே. [மொழிமாற்றே.
62. ஏற்றபொருளுக் கியையுமொழிகளை, மாற்றியோரடியுள் வழங்கன்

63. பெயரும்வினையுமாஞ் சொல்லையும்பொருளையும், வேறுநிரனிறீஇ முறையினுமெதிரினு, நேரும்பொருள்கோள் நிரனிறைநெறியே.
64. எழுவாயிறுதி நிலைமொழிதம்முட்,பொருளோக்குடையது பூட்டுவில்லாகும். [தாப்பிசை
65. இடைநிலைமொழியே யேனையீரிடத்தும் நடந்துபொருளைநண்ணுதல்
66. செய்யுளிறுதி மொழியிடைமுதலினும் எய்தியபொருள்கோள் அளைமறிப்பப்பே.
67. யாப்படிபலவினுங் கோப்புடைமொழிகளை, யேற்புழியிசைப்பதுகொண்டுகூட்டே. Compare from 8 to 13 எச்சவியல்.
68. ஏற்புழியெடுத்துடன் கூட்டுறுமடியவும், யாப்பீறிடைமுத லாக்கினும்பொருளிசை மாட்சியுமாறு அடியவும் அடிமறி. Tholcapyam.

# CHAPTER IV. இடைச் சொல்லியல். OF PARTICLES.

1. வேற்றுமைவினைசாரியையொப்புருபுக,டத்தம்பொருள விசைநிறையசைநிலை,குறிப்பெனெண்பகுதியிற் றனித்தியலின்றிப், பெயரினும்வினையினும் பின்முன்னோரிடத், தொன்றும்பலவும்வந் தொன்றுவதிடைச்சொல்.
2. ¶ தெரிநிலைதேற்ற மையமுற்றெண்சிறப், பெதிர்மறையெச்சம் வினவிழைவொழியிசை,பிரிப்புக்கழிவாக்க மின்னனஇடைப்பொருள். [மே.
3. பிரிநிலைவினவெண் ணீற்றசைதேற்ற, மிசைநிறையெனவா றேகாரம்
4. ஒழியிசைவினாச்சிறப் பெதிர்மறைதெரிநிலை, கழிவசைநிலைபிரிப் பெனவொட்டோவே.

5. வினைபெயர்குறிப்பிசை யெண்பண்பாறினு,
மெனவெனுமொழிவரு

மென்றுமற்றே.
[மையெட்டே.

6. எதிர்மறைசிறப்பைய மெச்சமுற்றளவை,
தெரிநிலையாக்க மோரும்

7. முற்றும்மையொரோவழி யெச்சமுமாகும்.
8. செவ்வெண்ணீற்றதா மெச்சவும்மை.
9. பெயர்ச்செவ்வெண்ணே யென்றாவெனாவெண்,
ணான்குந்தொகைபெ

றுமும்மையென்றெனவோ, டிந்நான்கெண்ணு மஃதின்றியுமியலும்.
10. என்றுமெனவு மொடுவுமொரோவழி, நின்றும்பிரிந்தெண் பொரு

டொறுநேரும்.
11. வினையொடுவரினு மெண்ணினையேற்பன.
12. விழைவேகால மொழியிசைதில்லே.
13. மன்னேயசைநிலை யொழியிசையாக்கங்,
கழிவுமிகுதி நிலைபேறாகும்.

14. வினைமாற்றசைநிலை பிறிதெனுமற்றே.
15. மற்றையதென்பது சுட்டியதற்கினம்.
16. கொல்லேயைய மசைநிலைக்கூற்றே.
17. ஒடுவுந்தெய்யவு மிசைநிறைமொழியே.
18. அந்திலாங்கசைநிலை யிடப்பொருளவ்வே.
19. அம்மவுரையசை கேண்மினென்றாகும்.

20. மாவென்கிளவி வியங்கோளசைச்சொல்.

21. மியாயிகமோமதி அத்தையித்தை
வாழியமாள வீயாழமுன்னிலையசை

22. யாகாபிறபிறக் கரோபோமாதிருஞ்
சின்குரையோரும் போலுமிரு ந்திட், டன்றாந்தாந்தான்
கின்றுநின்றசைமொழி.

CHAPTER V. உரிச்சொல்லியல். OF ATTRIBUTIVES.

1. ¶ பல்வகைப் பண்பும் பகர்பெயராகி, ஒருகுணம்
பலகுணந் தழுவிப்பெயர்வினை, ஒருவாசெய்யுட் குரியன
உரிச்சொல்.

2. ¶ உயிருயிரல்லாதாம் பொருட்குணம் பண்பே.

3. மெய்ந்நாமூக்கு நாட்டஞ்செவிகளி
னொன்றுமுதலாக்கீழ்க் கொண் டுமேலுணர்தலி
னோறிவாதியா வுயிரைந்தாகும்.

4. புன்மரமுதலவுற் றறியுமோரறிவுயிர்.

5. முரணந்தாதிநா வறிவொடீரறிவுயிர்.

6. சிதலெறும்பாதிமூக் கறிவின்மூவறிவுயிர்.

7. தும்பிவண்டாதிகண் ணறிவினாலறிவுயிர்.

8.

வானவர்மக்கணரகர்விலங்குபுள்ளாதிசெவியறிவோடையறிவுயிரே.

9. உணர்வியலாமுயி ரொன்றுமொழித்த
வுடன்முதலனைத்து முயிரல் பொருளே.
[வேறேயுடலுயிர்.

10. ¶ ஒற்றுமைநயத்தி ணென்றெனத்தோன்றினும்
வேற்றுமைநயத்தின்

11. ¶ அறிவருளாசையச்சமான
நிறைபொறையோர்ப்புக்கடைப்பிடிமை ய
ணினைவுவெறுப்புவப் பிரக்கநாண்வெகுளி
துணிவழுக்காறன் பெளிமை யெய்த் தறுன்பமின்ப
மிளமைமூப்பிகல் வென்றிபொச்சாப் பூக்கமறமத

மறவியினைய, உடல்கொளுயிர்க்குணம். [குணம்.

12. துய்த்தல்துஞ்ச ரெழுதலணித லுய்த்தலாதி யுடலுயிர்த்தொழிற்

13. பல்வகைவடிவிரு நாற்றமைவண்ண மறுசுவையூறெட் டுயிரல்பொரு
ட்குணம்.

14. தோன்றன்மறைதல் வளர்தல்சுருங்க
னீங்கலடைதனடுங்கலிசைத்

தலீதலின்னன இருபொருட்டொழிற்குணம்.

15. சாலஉறுதவ நனிகூர்கழிமிகல்.

16. கடியென்கிளவி காப்பேகூர்ம்ம விரையேவிளக்க மச்சஞ்சிறப்பே
விரைவேமிகுதி புதுமையார்த்தல் வரைவேமன்றல் கரிப்பிளுகும்.

17. மாற்றநுவற்சி செப்புரைகரைநொடி யிசைகூற்றுப்புகறன் மொழி
கிளவிவிளம்பறை பாட்டுப்பகர்ச்சி யியம்பல்சொல்லே.

18. முழக்கிரட்டொலிகலி யிசைதுவைபிளிறிரா யிரக்கழுங்கியம்பலி
மிழ்குளிறதிர்குரா கனைசிலைசும்மை கவ்வைகம்பலை யரவமார்ப்போ டின்

னவோசை.

19. ¶ இன்னதின்னுழி யின்னணமியலு மென்றிசைநூலுட் குணகுணிப் பெயர்கள் சொல்லாம்பரத்தலிற் பிங்கலமுதலா நல்லோருரிச்சொலி னய ர்தனர்கொளலே,

32

20. சொற்றொறுமிற்றிதன் பெற்றியென்றனைத்து
முற்றமொழிகுறின்
முடிவிலவாதலிற் சொற்றவற்றியலான்
ர்தல் தெள்ளியோர்திறனே.
டற்றையபிறவுந் தெற்றெனவுண

21. ¶ பழையனகழிதலும் புதியனபுகுதலும்
வழுவலகாலவகையினானே

# THOLCAPYA-NUNNOOL.

## BOOK III.

## பொருளதிகாரம் GRAMMAR OF GENERAL KNOWLEDGE.

### CHAPTER I. அகத்திணையியல். OF SOIL,

SEASONS

OF THE YEAR, AND

PRODUCTIONS. *

1. கைக்கிளைமுதலாப்பெருந்திணை இறுவாய்,முற்படக்கிளந்த எழுதிணை யென்ப. Division of பொருள் into 7 திணை :

2. அவற்றுள்:—நடுவணைந்திணை நடுவணதொழியப்,

படுதிரைவையம் பாத்திய பண்பே.

3. ¶ முதல், கரு, உரிப்பொருளென்றம்மூன்றே, நுவலுங்காலைமுறை சிறந்தனவே, பாடலுட்பயின்றவைநாடுங்காலை.

4. முதலெனப்படுவது நிலம் பொழுதிரண்டின்,
இயல்புணர்ந்தோரே.
இயல்பெனமொழிப

5. மாயோன்மேய காடுறையுலகமும், சேயோன்மேய மைவ்வரையுலகமும், வேந்தன்மேயதீம்புனலுலகமும், வருணன்மேயபெருமணலுலகமும், முல்லைகுறிஞ்சி மருதம்நெய்தலெனச், சொல்லியமுறையால் சொல்லவும்படுமே.

6. ‘காரும்மாலையு முல்லை குறிஞ்சி, கூதிர்யாமம் என்மனார்புலவர்.
7. பனியெதிர்பருவமும் உரித்தெனமொழிப. [ன்றும்.
8. வைகுறுவிடியன் மருதமெற்பாடு, நெய்தலாதன் மெய்பெறத்தோ
9. நடுவுநிலைத்திணையே நன்பகல் வேனிலொடு, முடிவுநிலைமருங்கின முன்னியநெறித்தே.

10. பின்பனிதானுமுரித்தெனமொழிப. [புலவர்.
11. இருவகைப்பிரிவும் நிலைபெறத்தோன்றினும், உரியதாகும் என்மனார்
12. திணைமயங்குறுதலுங்கடிநிலைஇலவே, நிலனொருங்குமயங்குதல் இல்லெனமொழிப, புலன்நன்குணர்ந்த புலமையோரே.
13. உரிப்பொருளல்லன மயங்கவும்பெறுமே.

* This chapter contains also a statement of the manners and customs of the ancient Hindus with regard to their social condition in earlier times.

33

14. புணர்தல்பிரிதல்இருத்தல் இரங்கல்,
ஊடல்இவற்றின்நிமித்தமென்
றிவை, தேருங்காலைத் திணைக்குரிப்பொருளே.
15. கொண்டுதலைக்கழியினும் பிரிந்தவண்இரங்கினும்,
உண்டெனமொ
ழிப ஓரிடத்தான.
16. கலந்தபொழுதும் காட்சியும்அன்ன.
17. முதல்எனப்படுவதாயிருவகைத்தே.
18. தெய்வம்உணாவே மா மரம் புட்பறை,
செய்தியாழின் பகுதியொடு
தொகைஇ, அவ்வகைபிறவும் கருவெனமொழிப.
19. எந்நிலமருங்கிற் பூவும்புள்ளும்,
அந்நிலம்பொழுதொடு வாராவாயி
னும், வந்தநிலத்தின் பயத்தஆகும்.
20. பெயரும்வினையும் என்றாயிருவகைய,

திணைதொறுமரீஇய திணைநிலை
ப்பெயரே.
21. ஆயர் வேட்டுவர்ஆடூஉத்திணைப்பெயர்,
ஆவயின்வரூஉம் கிழவரும்
உளரே.
22. ஏனோர்பாங்கினும் எண்ணுங்காலை, ஆனவகைய
திணைநிலைப்பெயரே.
23. அடியோர்பாங்கினும் வினைவலபாங்கினும்,
கடிவரையிலபுறத் தென்
மனார் புலவர்.
24. உயர்ந்தோர்மருங்கின் ஒழுக்கத்தான,ஏவல்மருங்கின்
ஏனோருமுரியர்
ஆகியநிலைமை அவருமன்னர்.
25. ஓதல்பகையே தூதிவைபிரிவே.
26. அவற்றுள், ஓதலும்தூதும்உயர்ந்தோர்மேன.
27. தானேசேறலுந்தன்னொடுசிவணிய,ஏனோர்சேறலும்
வேந்தன்மேன.
28. மேவியசிறப்பின் ஏனோர்படிமைய, முல்லைமுதலாச்
சொல்லியமு
றையால், பிழைத்ததுபிழையா தாகல்வேண்டியும்,
இழைத்தவொண்பொ
ருண்முடியவும்பிரிவே.
29. மேலோர்முறைமை நால்வர்க்குமுரித்தே.
30. மன்னர்பாங்கிற் பின்னோர்ஆகுப.
31. உயர்ந்தோர்க்குரிய ஓத்தினை.

32. வேந்துவினையியற்கை வேந்தனின்ஒரீஇய,
ஏனோர்மருங்கினும் எய்தி
டனுடைத்தே.
33. பொருள்வயிற்பிரிதலும் அவர்வயினுரித்தே,
உயர்ந்தோர் பொருள்
வயின் ஒழுக்கத்தான.
34. முந்நீர்வழக்கம் மகடூஉவொடில்லை.
35. எத்திணைமருங்கினும் மகடூஉமடன்மேல்,
பொற்புடைநெறிமையின்

மையான.
36. தன்னும்அவனும் அவளுஞ்சுட்டி, மன்னுநிமித்தம்
மொழிப்பொ ருள்தெய்வம், நன்மைதீமை
அச்சஞ்சார்தலென், றன்னபிறவுமவற்றொடு
தொகைஇ, முன்னியகால
மூன்றுடன்விளக்கித், தோழிதேஎத்துங் கண்
E



டோர்பாங்கினும், போகியதிறத்து நற்றாய்புலம்பலும்
ஆகியகிளவியு மவ் வழியுரிய.
37. ஏமப்பேரூர்ச் சேரியுஞ்சுரத்துந், தாமேசெல்லுந்
தாயருமுளரே.
38. அயலோராயினும் அகற்சிமேற்றே.

39. தலைவரும்விழும்நிலை யெடுத்துரைப்பினும், போக்கற்கண்ணும்விடு த்தற்கண்ணும், நீக்கலின்வந்த தம்முறுவிழுமமும், வாய்மையும்பொய் மையும் கண்டோர்ச்சுட்டித், தாய்நிலைநோக்கித் தலைப்பெயர்த்துக்கொ ளினும், நோய்மிகப்பெருகித் தன்னெஞ்சுகலுழந்தோளை, யழிந்ததுகளைஇய வொழிந்ததுகூறி, வன்பொறைநெருங்கி வந்ததன்திறத்தோ, டென்றிவை யெல்லா மியல்புறநாடின், ஒன்றித்தோன்றுந் தோழிமேன.

40. பொழுதும்ஆறும் உட்குவரத்தோன்றி, வழுவினாகிய குற்றங்காட்ட லும், ஊரதுசார்வுஞ் செல்லுந்தேயமு, மார்வநெஞ்சமொடு செப்பியகிள வியும், புணர்ந்தோர்பாங்கிற்புணர்ந்தநெஞ்சமோ, டழிந்தெதிர்கூறிவிடுப் பினுமாங்கத்,தாய்நிலைகண்டு தடுப்பினும்விடுப்பினுஞ்,சேய்நிலைக்ககன்றோ ர் செலவினும்வரவினுங், கண்டோர்மொழிதல் கண்டதென்ப.

41. ஒன்றாத்தமரினும் பருவத்துஞ்சுரத்தும், ஒன்றியதோழியொடு வலி ப்பினும் விடுப்பினும், இடைச்சுரமருங்கின் அவடமரெய்திக், கடைக்கொண் டுபெயர்த்தலிற் கலங்கஞரெய்திக், கற்பொடுபுணர்ந்த கௌவையுளப்பட அப்பாற்பட்ட வொருதிறத்தானும் நாளதுசின்மையு மிளமையதருமையுந், தாளாண்பக்கமுந் தகுதியதமைதியு, மின்மையதிளிவு முடைமையதுயர்ச் சியும் அன்பினதகலமு மகற்சியதருமையு, மொன்றாப்பொருள்வயி னூக் கியபாலினும்,

வாயினுங்கையினும் வகுத்தபக்கமோ, டுதியங்கருதிய வொ ருதிறத்தானும், புகழுமானமு மெடுத்துவற்புறுத்தலுங், தூதிடையிட்டவ கையினும், ஆகித்தோன்றும் பாங்கோர்பாங்கினு, மூன்றன்பகுதியு மண்

டலத்தருமையுந், தோன்றல்சான்ற மாற்றோர்மேன்மையும், பாசறைப்புல ம்பலு முடிந்தகாலத்துப், பாகனொடுவிரும்பிய வினைத்திறவகையினுங், கா வற்பாங்கி னுங்கோர்பக்கமும், பரத்தையின் அகற்சியிற் பரிந்தோட்குறுகி, இரத்தலுந்தெளித்தலு மெனவிருவகையோ, டொத்திறநாட்டங் கிழவோ ன்மேன.

42. எஞ்சியோர்க்கும் எஞ்சுதலிலவே.

43. நிகழ்ந்ததுநினைத்தற் கேதுவுமாகும்.

44. நிகழ்ந்ததுகூறி நிலையலுந்திணையே.

45. மரபுநிலைதிரியா மாட்சியவாகி, விரவும்பொருளும் விரவுமென்ப.

46. உள்ளுறையுவமம் ஏனையுவமமெனத், தள்ளாதாகுந் திணையுணர்வ கையே.

47. உள்ளுறைதெய்வ மொழிந்ததை(தை)நிலனெனக், கொள்ளுமெ ன்பகுதியறிந்தோரே.

48. உள்ளுறுத்திதனொ டொத்துப்பொருண்முடிகென, உள்ளுறுத்து ரைப்பதவ்வுள்ளுறையுவமம.



49. ஏனையுவமந் தானுணர்வகைத்தே.

50. காமஞ்சாலா விளமையோள்வயி, னேமஞ்சாலா விடும்பையெய்தி,

நன்மையுந்தீமையு மென்றிருதிறத்தாற், றன்னொடுமவளொடுந் தருக்கியபு ணர்த்துச், சொல்லெதிர்பெறுஅன் சொல்லியின்புறுதல், புல்லித்தோன் றுங் கைக்கிளைக்குறிப்பே. Compare நாற்கவிநம்பியகப்பொருள்,

51. ஏறியமடற்றிற மிளமைதீர்திறந், தேறுதலொழிந்த காமத்துமிகு திற,
மிக்ககாமத்து மடலொடுதொகைஇச், செப்பியநான்கும் பெருந்திணை க்குறிப்பே. அகத்திணையியல்,
from 1st to 116th Sootrum,

52. முன்னையநான்கும் முன்னதற்கென்ப.

53. நாடகவழக்கினு முலகியல்வழக்கினும், பாடல்சான்ற புலனெறிவழ
க்கினுங், கலியேபரிபாட் டாயிருபங்கினு, முரியதாகு மென்மனார் புலவர்.

54. மக்கணுதலிய அகனைந்திணையுஞ், சுட்டியொருவர் பெயர்கொளப்
பெறுஅர். Thandaveroya Moodeliar's Edition.

55. புறத்திணைமருங்கிற் பொருந்தினல்ல, தகத்திணைமருங்கினளவுதலி லவே. அகத்திணைமுற்றும்.

## CHAPTER II. புறத்திணையியல்.

### CIVIL POLITICAL AND MILITARY CUSTOMS.

1. ¶ அகத்திணைமருங்கின் அரில்தபவுணர்ந்தோர், புறத்திணையிலக்க
ணந் திறப்படக்கிளப்பின், வெட்சிதானே குறிஞ்சியதுபுறனே, உட்குவர
த்தோன்றும் ஈரேழ்துறைத்தே. See வெட்சிப்படலம்.

2. வேந்துவிடுமுனைஞர் வேற்றுப்புலக்களவின், ஆதந்தோம்பல் மேவ
ற்றாகும். of ஐயனாரிதனார் வெண்பாமாலை:

3. படைஇயங்கரவம் பாக்கத்துவிரிச்சி, புடைகெடப்போகிய செல
வேபுடைகெட, ஒற்றினாகிய வேயேவேய்ப்புறம், முற்றினாகிய புறத்திறை
முற்றிய, ஊர்கொலையாகோள் பூசன்மாற்றே, நோயின்றுய்த்தலு வலுவழி
த்தோற்றந், தந்துநிறை பாதீடு உண்டாட்டுக் கொடையென, வந்தவீரேழ்
வகையிற்றாகும். Thandaveroya Moodeliar's Edition.

4. மறங்கடைக்கூட்டிய துடிநிலைசிறந்த, கொற்றவைநிலையும் அத்திணை
ப்புறனே.

5. ¶ வெறிஅறிசிறப்பின் வெவ்வாய்வேலன், வெறியாட்டயர்ந்த காந்
தளுமுறுபகை, வேந்திடைதெரிதல் வேண்டியேந்துபுகழ்ப், போந்தைவே
ம்பே ஆரெனவரூஉம், மாபெருந்தானையர் மலைந்தபூவும், வடாவள்ளி வய
வரேத்திய, வோடாக்கழனிலை யுளப்படவோடா, உடல்வேந்தடுக்கிய
வுன்னநிலையும், மாயோன்மேய மன்பெருஞ்சிறப்பிற், றாவாவிழுப்புகழ்ப்
பூவைநிலையு, மாரமரோட்டலும் ஆபெயர்த்துத்தருதலுஞ், சீர்சால்வேந்
தன் சிறப்பெடுத்துரைத்தலுந், தலைத்தாணெடுமொழி தன்னொடுபுணர்த்
தலு, மனைக்குரிமரபினது கரந்தையன்றியும், வருதார்தாங்கல் வாள் வா



ய்த்துக்கவிழ்தலென், றிருவகைப்பட்ட பிள்ளைநிலையும், வாண்மலைந்தெழு
ந்தோனை மகிழ்ந்துபறைதூங்க, நாடவற்கருளிய பிள்ளையாட்டும், காட்சி
கால்கோள் நீர்ப்படைநடுகல், சீர்த்தகுசிறப்பிற்
பெரும்படைவாழ்த்த லென், றிருமூன்றுவகையிற்

கல்லொடுபுணரச், சொல்லப்பட்ட வெழுமூ
ன்றுதுறைத்தே. See
கரந்தைப்படலம்,

6. ¶ வஞ்சிதானே முல்லையதுபுறனே. See
வஞ்சிப்படலம்.

7. எஞ்சாமண்ணசை வேந்தனைவேந்தன், அஞ்சுதகத்தலைச் சென்றடல்
குறித்தன்றே. Thandaveroya Moodeliar's Edition.

8. இயங்குபடையரவம் எரிபரந்தெடுத்தல்,
வயங்கலெய்திய பெருமை யானும்,கொடுத்தலெய்திய
கொடைமையானும், அடுத்தூர்ந்தட்ட கொற்ற த்தானும்,
மாராயம்பெற்ற நெடுமொழியானும், பொருளின்றுயத்த
பேரா ண்பக்கமும், வருவிசைப்புனலைக் கற்சிறைபோல,
வொருவன்றாங்கிய பெ ருமையானும், பிண்டமேய
பெருஞ்சோற்றுநிலையும், வென்றோர்விளக்க
மும்தோற்றோர்தேய்வும, குன்றாச்சிறப்பிற்
கொற்றவள்ளையும், அழிபடை
தட்டோர் தழிஞ்சியொடுதொகைஇக்,
கழிபெருஞ்சிறப்பிற் றுறைபதின்
மூன்றே.

9. ¶ உழிஞைதானே மருதத்துப்புறனே. See உழிஞைப்படலம்.

10. முழுமுதலரணம் முற்றலுங்கோடலும், அனைநெறிமரபிற் றாகுமெ
ன்ப. of ஐயனாரிதனார்
வெண்பாமாலை.

11. அதுவேதானும் இருநால்வகைத்தே.

12. கொள்ளார்தேஎங் குறித்தகொற்றமும், உள்ளியதுமுடிக்கும் வேந்தனதுசிறப்புந், தொல்லெயிற்கிவர்தலுந் தோலின்பெருக்கமும், அகத்தோன்செல்வமும் அன்றிமுரணிய, புறத்தோனணங்கிய பக்கமுந்திறப்பட, ஒருதான்மண்டிய குறுமையுமுடன்றோர், வருபகைபேணார் ஆரெயிலுளப்படச், சொல்லப்பட்ட நாலிருவகைத்தே.

13. குடையும்வாளும் நாள்கோளன்றியும் மடையமையேணிமிசை மயக்கமுங்கடைஇச், சுற்றமரொழிய வென்றுகைக்கொண்டு,முற்றியமுதிர்வு முற்றியவகத்தோன், வீழ்ந்த நொச்சியுமற்றதன், புறத்தோன்வீழ்ந்த புதுமையானும், நீர்ச்செருவீழ்ந்த பாசியுமதாஅன்றூர்ச்செருவீழ்ந்த மற்றதன்மறனு, மதின்மிசைக்கிவர்ந்தோன் பக்கமும்மிகன் மதிற் குடுமிகொண்டமண்ணுமங்கலமும், வென்றவாளின மண்ணோடொன்றத், தொகைநிலையென்னுந்துறையொடுதொகைஇ,வகைநான்மூன்றேதுறையெனமொழிப.

14. ¶ தும்பைதானே நெய்தலதுபுறனே. See தும்மைப்படலம்,

Thandaveroya Moodeliar's Edition.

15. மைந்துபொருளாக வந்தவேந்தனைச்,
சென்றுதலையழிக்குஞ் சிறப்
பிற்றென்ப.

16. கணையும்வேலுந் துணையுறமொய்த்தலிற்,
சென்றவுயிரினின்றயாக்
கை,இருநிலந்தீண்டா வருநிலைவகையோ,டிருபாற்பட்ட ஒருசிறப்பின்றே.

37

17. தானையானை குதிரையென்ற, நோனாருட்கு
மூவகைநிலையும், வேன்
மிகுவேந்தனை மொய்த்தவழியொருவன்,தான்மீண்டெறிந்த தார்நிலையன்
றியு, மிருவர்தலைவர்தபுதிப்பக்கமும்,ஒருவனொருவனை யுடைபடைபுக்குக்,
கூழைதாங்கிய வெருமையும்படையறுத்துப், பாழிகொள்ளு மேமத்தா
னுங்,களிறெறிந்தெதிர்ந்தோர் பாடுங்களிற்றொடு, பட்டவேந்தனை யட்ட
வேந்தன், வாளோராடும் மலையுமவாள்வாய்த், திருபெருவேந்தர் தாமுஞ்
சுற்றமும், ஒருவருமொழியாத் தொகைநிலைக்கண்ணுஞ், செருவகத்திறை
வன் வீழ்ந்தெனச்சினை இ, யொருவன்மண்டிய நல்லிசைநிலையும், பல்ப
டையொருவற் குடைதலின்மற்றவ, னெள்வாள்வீசிய நூழிலுமுளப்ப
டப், புல்லித்தோன்றும் பன்னிருதுறைத்தே.

18. ¶ வாகைதானே பாலையதுபுறனே. See வாகைப்படலம், 85th page, Thandaveroya Moodeliar's Edition.

19. தாவில்கொள்கைத் தத்தங்கூற்றைப்,
பாகுபடமிகுதிப் படுத்தலெ ன்ப.

20. அறுவகைப்பட்ட
பார்ப்பனப்பக்கமும்,ஐவகைமரபின் அரசர்பக்க
மும், இருமூன்றுமரபின் ஏனோர்பக்கமும், மறுவில்செய்தி
மூவகைக்கால

மும், நெறியினாற்றிய அறிவன்றேயமும்,
நாலிருவழக்கிற்றாபதப்பக்க மும், பாலறிமரபிற்
பொருநர்க்கண்ணும், அனைநிலைவகையோ டாங்கெழு
வகையிற், றொகைநிலைபெற்ற தென்மனார்புலவர்.

21. கூதிர்வேனில் என்றிருபாசறைக், காதலினொன்றிக்
கண்ணியமரபி னும, ஏரோர்களவழி யன்றிக்களவழித்,
தேரோர்தோற்றிய வென்றியுந்
தேரோர், வென்றகோமான் முன்றேர்க்குரவையும்,
ஒன்றியமரபிற் பின்
தேர்க்குரவையும், பெரும்பகைதாங்கும் வேலினானும், அரும்பகைதாங்கு
மாற்றலானும், புல்லர்வாழ்க்கை வல்லாண்பக்கமும், ஒல்லார்நாணும் பெ
ரியவர்க்கண்ணிச், சொல்லியவகையி
னொன்றொடுபுணர்ந்து, தொல்லுயிர் வழங்கிய
வவிப்பலியானும், ஒல்லாரிடவயிற் புல்லியபாங்கினும்,
பகட்டி
னானு மாவினானுந், துகட்டபுசிறப்பிற்
சான்றோர்பக்கமுங், கட்டினீத்த காலினானும்,
எட்டுவகைநுதலியஅவையத்தானுங், கட்டமையொழுக்கத்
துத் தண்ணுமையானு, மிடையில்வண்புகழ்

கொடைமையானும், பிழைத்
தோர்தாங்கும் காவலானும், பொருளொடுபுணர்ந்த
பக்கத்தானும், அரு ளொடுபுணர்ந்த வகற்சியானுங்,
காமநீத்த பாலினுமென், றிருபாற்ப
ட்ட வொருபதிற்றுறைத்தே.
(வொன்பதிற்றுத்துறைத்தே).

22. ¶ காஞ்சிதானே பெருந்திணைப்புறனே. See
காஞ்சிப்படலம்.

23. பாங்கருஞ்சிறப்பிற்பல்லாற்றானு, நில்லாவுலகம்
புல்லியநெறித்தே

24. மாற்றருங்கூற்றஞ் சாற்றியபெருமையுங்,
கழிந்தோரொழிந்தோர்

க்குக் காட்டியமூதுமையும், பண்புறவரூஉம்பகுதிநோக்கிப், புண்கிழித்து
முடியுமறத்தினானு, மேமச்சுற்றமின்றிப்புண்ணோற், பேஎயோம்பிய பேஎ
ய்ப்பக்கமு, மின்னனென்றிரங்கிய மன்னையானு, மின்னதுபிழைப்பினிது



வாகுவெனெனத், துன்னருஞ்சிறப்பின் வஞ்சினத்தானும், இன்னகைம
னைவி பேஎய்ப்புண்ணோற், றுன்னுதல்கடிந்த தொடாஅக்காஞ்சியு, நீத்த
கணவற் றீர்த்தவேலிற், பேஎத்தமனைவி காஞ்சியானு,
நிகர்த்துமேல்வந்த

வேந்தனொடுமுதுகுடி, மகட்பாடஞ்சிய மகட்பாலானு, முலையுமுகனுஞ்
சேர்த்திக்கண்டோன், றலையொடுமுடிந்த நிலையொடுதொகைஇ, யீரைந்

தாகு மென்பபேரிசைஇ, மாய்ந்தமகனேச்சுற்றியசுற்ற, மாய்ந்தபூசன்மய
க்கத்தானும், தாமேயேங்கியதாங்கரும்பையுளுங், கணவனொடுமுடிந்த பட
ர்ச்சிநோக்கிச், செலவோர்செப்பிய மூதானந்தமு,
நனிமிகுசுரத்திடைக் கணவனையிழந்து,
தனிமகள்புலம்பியமுதுபாலையுங், கழிந்தோர்தேஎத் த
ழிப்படருறீஇ, யொழிந்தோர்புலம்பிய கையறுநிலையுங்,
காதலியிழந்த தபுதாரநிலையுங், காதலியிழந்த தாபதநிலையு,
நல்லோற்கணவ னொடுநளி யழற்புகீஇச்,
சொல்லிடையிட்டபாலைநிலையு மாயபெருஞ்சிறப்பிற் புதல்
வற்பயந்த, தாயதபவரூஉந் தலைப்பெயனிலையு,
மலர்தலையுலகின்மரபுநன் கறியப், பலர்செலச்செல்லாக்
காடுவாழ்த்தொடு, நிறையருஞ்சிறப்பிற்
றுறையிரண்டுடைத்தே.
[த்தே.

25. ¶ பாடாண்பகுதி கைக்கிளைப்புறனே, நாடுங்காலை
நாலிரண்டுடை

26. அமரர்கண்முடியும் அறுவகையானும்,
புரைதீர்காமம்புல்லியபாங்கி னும், ஒன்றன்பகுதியி
னொன்றுமென்ப.

27. வழங்கியன்மருங்கின் வகைபடநிலைஇப்,
பரவலும்புகழ்ச்சியுங் கரு தியபாங்கினும், முன்னோர்கூறிய
குறிப்பினுஞ்செந்துறை, வண்ணப்பகுதி வரைவின்றாங்கே.

28.
காமப்பகுதிகடவுளும்வரையார்,ஏனோர்பாங்கினு மென்மனார்புலவர்.

29. குழவிமருங்கினு மகிழ்வதாகும்.

30. ஊரொடுதோற்றமும், உரித்தெனமொழிப.

31. வழக்கொடுசிவணிய, வகைமையான.

32. மெய்ப்பெயர்மருங்கின் வைத்தனர்வழியே.

33. கொடிநிலை கந்தழி வள்ளியென்ற, வடுநீங்குசிறப்பின் ன்றும், கடவுள்வாழ்த்தொடு கண்ணியவருமே.
முதலனமூ

34. கொற்றவள்ளை யோரிடத்தான.

35. கொடுப்போரேத்திக் கொடார்ப்பழித்தலும், மடுத்தூர்ந்தேற்றியவி யன்மொழிவாழ்த்துஞ், சேயவரல்வருத்தம் வீடாவாயில், காவலர்க்குரை த்த கடைநிலையானுங், கண்படைக்கண்ணிய கண்படைநிலையும், கபிலைக ண்ணிய வேள்விநிலையும், வேலினோக்கிய விளக்குநிலையும், வாயுறைவாழ் த்துஞ் செவியறிவுறூஉ, மாவயின்வரூஉம் புறநிலைவாழ்த்துங், கைக்கிளை
வகையோ டுளப்படத்தொகைஇத், தொக்கநான்கு முளவெனமொழிப.

36. தாவினல்லிசை கருதியகிடந்தோர்க்குச், சூதரேத்திய துயிலெடை
நிலையுங், கூத்தரும்பாணரும் பொருநரும்விறலியு, மாற்றிடைக்காட்சி யுறழத்தோன்றிப், பிறழ்பெறற்பெருவளம் பெருஅர்க்கறிவுறீஇச், செ

ன் றுபயனெதிர்ச் சொன்னபக்கமுஞ், சிறந்தநாளணி செற்றநீக்கிப், பிறந்தநாள்வயிற் பெருமங்கலமுஞ், சிறத்தசீர்த்தி மண்ணுமங்கலமு, நடைமிகுத்தேற்றிய குடைநிழன்மரபு, மாணார்ச்சுட்டிய வாண்மங்கலமு, மன்னெயிலழித்த மண்ணுமங்கலமும், பரிசிலகடைஇய கடைக்கூட்டுநிலையும் பெற்றபின்னரும் பெருவளனேத்தி, நடைவயிற்றோன்று மிருவகைவிடையு, மச்சமுமுவகையு மெச்சமின்றி, நாளும்புள்ளும் பிறவற்றுநிமித்தமுங், காலங்கண்ணிய வோம்படையுளப்பட, ஞாலத்துவரூஉ நடக்கையதுகுறிப்பிற், காலமூன்றொடு கண்ணியவருமே. †

புறத்திணைமுற்று.

## CHAPTER III. களவியல். CLANDESTINE MARRIAGE.

1. இன்பமும்பொருளு மறனுமென்றாங், கன்பொடுபுணர்ந்த வைந்திணைமருங்கிற், காமக்கூட்டங் காணுங்காலை, மறையோர்தேஎத்து மன்றலெட்டனுட், டுறையமைநல்லியாழ்த் துணைமையோரியல்பே.

2. ஒன்றேவேறே யென்றிருபால்வயி, னொன்றியுயர்ந்த பாலதாணையி, னொத்தகிழவனுங் கிழத்தியுங்காண்ப, மிக்கோனாயினுங் கடிவரையின்றே.

3. சிறந்துழியையஞ் சிறந்ததென்ப, விழிந்துழியிழிபே சுட்டலான.

4. வண்டேயிழையே வள்ளிபூவே, கண்ணேயலமரலிமைப்பேயச்ச மென் றன்னவைபிறவு மாங்கவணிகழ, நின்றவைகளையுங்கருவியென்ப.

5. நாட்டமிரண்டு மறிவுடம்படுத்தற்குக், கூட்டியுரைக்குங் குறிப்புரையாகும்.

6. குறிப்பேகுறித்தவை கொள்ளுமாயி, ஞங்கவைநிகழு மென் மனூர்பு லவா.

7. பெருமையும்உரனும் ஆடூஉமேன.

8. அச்சமும்நாணும் மடனுமுந்துறுத்த,
நிச்சமும்பெண்பாற்குரியவெ னப.

9.
வேட்கையொருதலை யுள்ளுதன்மெலித, லாக்கஞ்செப்பனு ணுவறையி றத்த, ணேக்குவவெல்லா மவையேபோறன், மறத்தன்மயக்கஞ் சாக்கா டென்றச், சிறப்புடைமரபினவை களவெனமொழிப.

10. முன்னிலையாக்கல் சொல்வழிப்படுத்த,
ணன்னயமுரைத்த ணகை
நனியுறுஅத், தந்நிலையறிதன் மெலிவுவிளக்குறுத்த, றந்நிலையுரைத்த றெ ளிவகப்படுத்தலென், றின்னவைநிகழு மென்மனூர்புலவர்.

11. மெய்தொட்டுப்பயிறல் பொய்பாராட்ட, லிடம்பெற்றுத்தழாஅ, லிடையூறுகிளத்த, னீடுநினைந்திரங்கல் கூடுதலுறுதல், சொல்லியநுகர்ச்சி வல்லேபெற்றுழித், தீராத்தேற்ற முளப்படத்தொகைஇப், போராச்சிறப்பி னிருநான்குகிளவியும்,
பெற்றவழிமகிழ்ச்சியும் பிரிந்தவழிக்கலங்கலு, நிற் பவைநினை இ நிகழ்பவையுளப்பினுங், குற்றங்காட்டிய வாயில்பெட்பினும்

† Compare this Chapter with ஐயனரிதனார் வெண்பாமாலை and புறப்பொருட் பன்னிருபடலம்.



பெட்டவாயில்பெற் றிரவுவலியுறுப்பினு, மூரும்பேருங்
கெடுதியும்பிறவு

நீரிற்குறிப்பி னிரம்பக்கூறித், தோழியைக்குறையுறும் பகுதியுந்தோழி
குறையவட்சார்த்தி மெய்யுறக்கூறலுந் தண்டாதிரப்பினும் மற்றையவழி
யுஞ் சொல்லவட்சார்த்தலிற் புல்லியவகையினு,மறிந்தோள்யாப்பி னவ்வ
ழிமருங்கிற், கேடும்பீடும் கூறலுந்தோழி, நீக்கலினாகிய நிலைமையுநோக்கி,
மடன்மாகூறு மிடனுமாருண்டே.

12. பண்பிற்பெயர்ப்பினும் பரிவுற்றுமெலியினு,
மன்புற்றுநகினு மவட்
பெற்றுமலியினு, மாற்றிடையுறுதலு மவ்வினைக்கியல்பே.

13. பாங்கனிமித்தம் பன்னிரண்டென்ப.

14. முன்னையமூன்றுங் கைக்கிளைக்குறிப்பே,
பின்னையநான்கும் பெருந்
திணைபெறுமே.

15. முதலொடுபுணர்ந்த யாழோர்மேன,
தவலருஞ்சிறப்பி னைந்நிலம்பெ
றுமே.

16. இருவகைக்குறிபிழைப் பாகியவிடத்துங்,
காணுவகையிற் பொழுது நனியிகப்பினுங்,
தானகம்புகாஅன் பெயர்தலின்மையிற் காட்சியாசையிற்
களம்புக்குக்கலங்கி, வேட்கையின்மயங்கிய கையறுபொழுதினும், புகாஅ
க்காலைப் புக்கெதிர்ப்பட்டுழிப், பகாஅவிருந்தின் பகுதிக்கண்ணும், வேளா
ணெதிரும் விருந்தின்கண்ணும், வாளாணெதிரும்
பிரிவினானும், நாணுநெஞ்
சலைப்ப விடுத்தற்கண்ணும், வரைதல்வேண்டித்
தோழிசெப்பிய, புரைதீர்
கிளவி புல்லியவெதிரும், வரையுடன்படுதலு
மாங்கதன்திறத்தும், புரை
படவந்த மறுத்தலொடுதொகைஇக், கிழவோன்மேன
வென்மனார்புலவர்.

17. காமத்திணையிற் கண்ணின்றுவரூஉ நாணும்மடனும்
பெண்மையவாத லிற், குறிப்பினும்இடத்தினும்
அல்லதுவேட்கை, நெறிப்படவாரா வவள்
வயினான.

18. காமஞ்சொல்லா நாட்டம்இன்மையின்,
ஏமுறவிரண்டும் உளவென
மொழிப.

19. சொல்எதிர்மொழிதல் அருமைத்தாகலி,
னல்லகூற்றுமொழியவள்வ
யினான.

20. மறைந்தவற்காண்டல்தற்காட்டுறுதல,

ணிறைந்தகாலிற் சொல்லெதிர்
மழுங்கல், வழிபாடுமறுத்தல் மறுத்தெதிர்கோடல்,
பழிதீர்முறுவல் சிறி
தேதோற்றல், கைப்பட்டுக்கலங்கினும் நாணுமிகவரினும்,
இட்டுப்பிரிவிரங்
கினும், அருமைசெய்தயர்ப்பினும், வந்தவழியெள்ளினும்
விட்டுயிர்த்தழுங்
கினும், நொந்துதெளிவொழிப்பினும் அச்சம்நீடினும்,
பிரிந்தவழிக்கலங்கி
னும் பெற்றவழிமலியினும், வருந்தொழிற்கருமை
வாயில்கூறினும், கூறிய
வாயில்கொள்ளாக்காலையும், மனைப்பட்டுக்கலங்கிச்
சிதைந்தவழித்தோழி

க்கு, நினைத்தல்சான்றவருமறையுயிர்த்தலும், முயிராக்காலத்துயிர்த்தலுமு
யிர்செல, வேற்றுவரைவுவரினது மாற்றுசற்கண்ணு, நெறிபடுநாட்டத்து



நிகழ்ந்ததைமறைப்பினும்,

பொறியினயர்த்தபுணர்ச்சிநோக்கி, யொருமை
க்கேண்மையி னுறுகுறைதெளிந்தோ,
ளருமைசான்றநாலிரண்டுவகையிற்,
பெருமைசான்றவியல்பின்கண்ணும், பெயர்தலையடுத்த

மடலின்கண்ணுங், கையறுதோழிகண்ணீர்துடைப்பினும்,
வெறியாட்டிடத்து வெருவினகண் ணும், குறியிறைப்புமை
மருட்டற்கண்ணும், வரைவுதலைவரினும் களவறி
வுறினுந், தமர்தற்காத்த
காரணமருங்கினுந்,தன்குறிதள்ளிய தெருளாக்கா
லை, வந்தனன்பெயர்ந்த வறுங்களநோக்கித்,
தன்பிழைப்பாகத் தழீஇத்
தேறலும், வழுவின்றுநிலைஇய வியற்படுபொருளினும்,
பொழுதுமாறும்
புரைவதன்மையி, னழிவுதலைவந்த சிந்தைக்கண்ணுங்,
காமஞ்சிறப்பினு ம
வளளிசிறப்பினு, மேமஞ்சான்ற வுவகைகண்ணுந்,
தன்வயினுரிமையு மவ
ன்வயிற்பரத்தையு மன்னவுமுளவே யோரிடத்தான.

21. வரைவிடைவைத்த காலத்துவருந்தினும்,
வரையாநாளிடை வந்தோ
ன்முட்டினு, முறையெனத்தோழிக் குரைத்தற்கண்ணுந்,
தானேகூறுங் கா
லமுமுளவே.

22. உயிரினுஞ்சிறந்தன்று நாணேநாணினுஞ்,
செயிர்தீர்காட்சிக் கற்புச்
சிறந்தன்றெனத், தொல்லோர்கிளவி
புல்லியநெஞ்சமொடு, காமக்கிழவ

னுளவழிப்படினுக், தாவினன்மொழி கிழவிகிளப்பினு, மாவகைபிறவுந்

தோன்றுமன்பொருளே.

23. நாற்றமுந்தோற்றமு மொழுக்கமுமுண்டியுஞ், செய்வினைமறைப்பி

னுஞ் செல்வினும்பயில்வினும், புணர்ச்சியெதிர்ப்பா டுள்ளுறுத்துவருஉ, மு ணர்ச்சியெழினு முணர்ந்தபின்றை, மெய்யினும்பொய்யினும் வழிநிலைபி ழையாது, பலவேறுகவர்பொரு ளாட்டத்தானுங், குறையுறற்கெதிரிய கிழ வனைமறையுறப், பெருமையிற்பெயர்ப்பினு முலகுரைத்தொழிப்பினு, மரு

மையினகற்சியு மவளறிவுறுத்துப், பின்வருகென்றலும் பேதமையூட்டலு, முன்னுறுபுணர்ச்சி முறைநிறுத்துரைத்தலு, மஞ்சியச்சுறுத்தலு முரைத்து ழிக்கூட்டமோ, டெஞ்சாதுகிளந்த விருநான்குகிளவியும், வந்தகிழவனை மாயஞ்செப்பிப், பொறுத்தகாரணங் குறித்தகாலையும், புணர்ந்தபின்னவ ன்வயின் வணங்கற்கண்ணுங், குறைந்தவட்படரினு மறைந்தவளருகத்,

தன்னுடுமவளொடு முதன்மூன்றளைஇப் பின்னிலைநிகழும் பலவேறுமரு ங்கினு, நன்னயம்பெற்றுழி நயம்புரியிடத்தினு, மெண்ணரும்பன்னகை கண்ணியவகையினும், புணர்ச்சிவேண்டினும் வேண்டாப்பிரிவினும், வேளா ண்பெருநெறி வேண்டியவிடத்தும், புணர்ந்துழியுணர்ந்த வறிமடச்சிறப் பினு, மோம்படைகிளவிப் பாங்கின்கண்ணுஞ், செங்கடுமொழியாற் சிதை வுடைத்தாயினு, மென்புறைகப்பிரிந்தோள் வழிச்சென்றுகடைஇ, யன்புத லையடுத்தவன்பொறைக்கண்ணு, மாற்றதுதிமை யறிவுறுகலக்கமுங், காப் பின்கடுமை கையறவரினுங், களனும்பொழுதும் வரைநிலைவிலக்கிச், காதன்மிகுதி யுளப்படப்பிறவு, நாடுமூரு மில்லுங்குடியும், பிறப்புஞ்சி

F

றப்பு பிறப்புநோக்கி, யவன்வயிற்றேன்றிய
கிளவியொடுதொகைஇ, யனை
நிலைவகையான் வரைதல்வேண்டினு, மையச்செய்கை தாய்க்கெதிர்மறுத்துப், பொய்யெனமாற்றி மெய்வழிகொடுப்பினு, மவனீவிலங்குறினுங் களம்பெறக்காட்டினும், பிறன்வரைவாயினு மவன்வரைவுமறுப்பினு, முன்னிலையறனெனப் படுத்தலென்றிருவகைப், புரைதீர்கிளவி தாயிடைப்புகுப்பினும், வரைவுடன்பட்டோர்க் கடாவல்வேண்டினு, மாங்கதன்றன்மையின் வன்புறையுளப்படப், பாங்குறவந்த நாலெட்டுவகையுந், தாங்கருஞ்சிறப்பிற் றோழிமேன.

24. களவிலராயினுங்
காமமெய்ப்படுப்பினு,மன்புமிகத்தோன்றினுந் தலைப்பெய்துகாணினுங், கட்டினுங்கழங்கினும்
வெறியெனவிருவரு, மொட்டி யதிறத்தாற் செய்திக்கண்ணு,
மாடியசென்றுழி யழிவுதலைவரினுங், காதல் கைம்மிகக்
கனவினரற்றலுந், தோழியைவினவலுந்
தெய்வம்வாழ்த்தலும், போக்குடன்றந்தபிற்
றோழியொடுகெழீஇக், கற்பினுக்கத்து நிற்றற்கண்ணும்,
பிரிவினெச்சத்து மகனெஞ்சுவலிப்பினு,
மிருபாற்குடிப்பொரு ளிய
ல்பின்கண்ணு, மின்னவகையிற் பதின்மூன்றுகிளவியோ, டன்னவைபிறவுஞ்செவிலிமேன.

25. தாய்க்கும்வரையா ருணர்வுடம்படினே.

26. கிழவோனறியா வறிவினளிவளென, மையறுசிறப்பினுயர்ந்தோர் பாங்கி, னையக்கிளவியி னறிதலுமுரித்தே.

27. தன்னுறுவேட்கை கிழவன்முற்கிளத்த, லெண்ணுங்காலைக் கிழத்திக் கில்லைப், பிறநீர்மாக்க ளின்றியவாயிடை, பெய்ந்நீர்போலு முணர்விற்றெ னப.

28. காமக்கூட்டந்தனிமையிற்பொலிதலிற், றாமேதூதுவராதலுமுரித்தே
29. அவன்வரம்பிறத்த லறந்தனக்கின்மையிற், களஞ்சுட்டுக்கிளவி கிழ வியதாகுந், தான்செலற்குரிய வழியாகலான.

30. தோழியின்முடியு மிடனுமாருண்டே.

31. முந்நாளல்லது

துணையின்றுகழியா, தந்நாளகத்து மதுவரைவின்றே.

32. பன்னூறுவகையினுந் தன்வயின்வரூஉ, நன்னயமருங்கி னாட்டம்வே ண்டலிற், றுணைச்சுட்டுக்கிளவி கிழவியதாகுந், துணையோர்கரும மாக லான.

33. ஆய்பெருஞ்சிறப்பி னருமறைகிளத்தலிற்,
[விலியாகும்.
றாயெனப்படுவோள் செ *34. தோழிதானே செவிலிமகளே.

35. சூழ்தலுமுசாத்துணை நிலைமையிற்பொலிமே.

36. குறையுறவுணர்தன் முன்னுறவுணர்த, லிருவருமுளவழி யவன்வரவு ணர்தலென, மதியுடம்படுத்த லொருமூவகைத்தே. [மொழிப.
37. அன்னவகையா னுணர்ந்தபினல்லது, பின்னிலைமுயற்சி பெறாஅனென

38. முயற்சிக்காலத் ததற்படநாடிப், புணர்த்தலாற்றலு

மவள்வயினான.



39.
குறியெனப்படுவ திரவினும்பகலினு, மறியத்தோன்று மாற்றதென்ப.
40. இரவுக்குறியே யில்லகத்துள்ளு, மனையோர்கிளவி
கேட்கும்வழிய துவே, மனையகம்புகாக் காலையான.
41. பகற்புணர்களனே புறனெனமொழிப,
வவளறிவுணரவருவழியான.
42. அல்லகுறிப்படுதலும் வள்வயினுரித்தே,
யவன்குறிமயங்கிய வமை வொடுவரினே.
43. ஆங்காங்கொழுகு மொழுக்கமுமுண்டே,
யோங்கியசிறப்பி னொரு சிறையான.
44. மறைந்தவொழுக்கத் தோரையுநாளுந்
துறந்தவொழுக்கங் கிழவோ ர்க்கில்லை.
45. ஆறினதருமையு மழிவுமச்சமு, மூறுமுளப்பட
வதனோரன்ன.
46. தந்தையுந்தன்னையு முன்னத்தினுணர்ப.
47. தாயறிவுறுதல் செவிலியோடொக்கும்.
48. அம்பலுமலருங் களவுவெளிப்படுத்தலி,

ளுங்கவன்முதலவன் கிழவ ளுகும்.

49. வெளிப்படவரைதல் படாமைவரைதலென்,
ருயிரண்டென்ப வரை தலாறே.

50. வெளிப்படைதானே
கற்பினொடொப்பினு,ஞாங்கர்க்கிளந்த மூன்று பொருளாக,
வரையாதுபிரிதல் கிழவோர்க்கில்லை.

களவியன் முற்று.

## CHAPTER IV. கற்பியல் LAWFUL MARRIAGE AND THE

## MATRIMONIAL STATE.

1. கற்பெனப்படுவது கரணமொடுபுணரக், கொளற்குரிமரபிற் கிழவன் கிழத்தியைக், கொடைக்குரிமரபினோர்கொடுப்பக்கொள்வதுவே.

2. கொடுப்போரன்றியுங் கரணமுண்டே, புணர்ந்துடன்போகிய கா லையான.

[ண்டே.

3. மேலோர்மூவர்க்கும் புணர்த்தகரணங்,
கீழோர்க்காகியகாலமுமு

4. பொய்யும்வழுவுந்தோன்றிப்பின்ன,ரையர்யாத்தனர் கரணமென்ப.

5. கரணத்தினமைந்து முடிந்தகாலை,
நெஞ்சுதளையவிழ்ந்த புணர்ச்சிக்

கண்ணு, மெஞ்சாமகிழ்ச்சி யிறந்துவருபருவத்து, மஞ்சவந்தவுரிமைக்கண்
ணு, நன்னெறிப்படருந் தொன்னலப் பொருளினும், பெற்றதேஎத்துப்பெ
ருமையினிலைஇக், குற்றஞ்சான்றபொருளெடுத்துரைப்பினு, நாமக்காலத்
துண்டெனத்தோழி, யேமுறுகடவுளேத்தியமருங்கினும், அல்லநீரவார்வ
மோடளைஇச், சொல்லுறுபொருளின்கண்ணுஞ்சொல்லென, வெனது(?)சு
வைப்பினு நீகைதொட்டது,வானோரமுதம்புரையுமாலெமக்கென,வடிசிலு
ம்பூவுந்தொடுதற்கண்ணு,மந்தணர்திறத்துஞ் சான்றோர்தேஎத்து,மந்தமில்

44

சிறப்பிற் பிறர்பிறர்திறத்தினு,

மொழுக்கங்காட்டியகுறிப்பினு மொழுக்க
த்துக், களவினுணிகழ்ந்த வருமையைப்புலம்பி,
யலமரலுள்ளமோடளை
வியவிடத்து, மந்தரத்தெழுதியவெழுத்தினமான,
வரீதகுற்றம்வழிகெட
வொழுகலு, மழியலஞ்சலென்றாயிருபொருளினுந்,
தானவட்பிழைத்தபரு
வத்தானு, நோன்மையும்பெருமையு மெய்கொளவருளிய,
பன்னல்சான்ற
வாயிலொடு பொருந்தித் தன்னினாகிய தகுதிக்கண்ணும்,
புதல்வற்பயந்தபு னிறுசேர்பொழுதி, னெய்யணிமயக்கம்
புரிந்தோனோக்கி, யையர்பாங்கினு

மமரர்ச்சுட்டியுஞ்,
செய்பெருஞ்சிறப்பொடுசேர்தற்கண்ணும், புயங்கெ
ழுதுணைவனைப் புல்லியபுல்லர், துயங்குவள்கிடந்த
கிழத்தியைக்குறுகிப்
புல்கெனமுன்னிய நிறையழிபொழுதின் மெல்லனசீரடி
புல்லியவிரவினு
முறலருங்குண்மையி னூடன்மிகுத்தோளைப்,
பிறப்பிற்பெண்டிரிற் பெயர்
த்தற்கண்ணும், பிரிவினெச்சத்துப் புலம்பியவிருவரைப்,
பிரிவினீக்கியபகு
திக்கண்ணும் நின்றுநனிபிரிவினஞ்சியபையுளுஞ்,
சென்றுகையிகந்து பெ
யர்த்துள்ளியவழியுங், காமத்தின்வலியுங்
கைவிடினச்சமூந் தானவட்பி
ழைத்த நிலையின்கண்ணு, முடன்சேறற்செய்கை
யோடன்னபிறவு, மடம்
படவந்த தோழிக்கண்ணும், வேற்றுநாட்டகல்வயின்
விழுமத்தானு, மீட்டு
வரவாய்ந்தவகையின்கண்ணு, மவ்வழிப்பெருகிய
சிறப்பின்கண்ணும், பே
ரிசையூர்திப் பாங்கர்பாங்கனும், காமக்கிழத்தி

மனையோளென்றிவ, ரோமு
றுகிளவிசொல்லியவெதிருஞ்.

சென்றதேளத்துழப்புநனிவிளக்கி, யின்றிச்
சென்றதந்நிலைகிளப்பினு,

மருந்தொழின்முடித்தசெம்மற்காலை, விருந்தொ
டுநல்லவை வேண்டற்கண்ணு,

மாலையேந்தியபெண்டிருமக்களுந், கேளி
ரொழுக்கத்துப்புகற்சிக்கண்ணு,

மேனைவாயிலெதிரொடுதொகைஇப், பண்
ணமைபகுதிப்பதினொருமூன்று,

மெண்ணருஞ்சிறப்பிற்கிழவோன்மேன.

6. அவனறிவாற்றவறியுமாகலி, னேற்றற்கண்ணுநிறுத்தற்கண்ணு, முரிமைகொடுத்தகிழவோன்பாங்கிற், பெருமையிற்றிரியாவன்பின்கண்ணுங், கிழவன்மகவேஉப்புலம்புபெரிதாகலி, னலமரல்பெருகியகாமத்தின்மிகுதியு, மின்பமுமிடும்பையுமாகியவிடத்துங், கயந்தலைதோன்றியகாமர்நெய்யணி, நயந்தகிழவனைநெஞ்சுபுண்ணுறீஇ, நளியினீக்கியவிளிவருநிலையும்,புகன்றவுள்ளமொடுபுதுவோர்சாயற், ககன்றகிழவனைப்புலம்புநனிகாட்டி யிய

ன்றநெஞ்சந்தலைப்பெயர்த்தருக்கி,

யெதிர்பெயதுமறுத்தவீரத்துமருங்கி
னுந், தங்கியவொழுக்கத்துக்கிழவனைவணங்கி,

யெங்கையர்க்குரையென
விரத்தற்கண்ணுஞ்,

செல்லாக்காலைச்செல்கெனவிடுத்தலுங், காமக்கிழத்தி
தன்மகத்தழீஇ, யேமுறுவிளையாட்டிறுதிக்கண்ணுஞ்,

